# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

•Volume : 3 • Issue: 2 • April 2016 • Annual Subcription Rs. 100/- • மலர் 3 • இதழ்: 2 • ஏப்ரல் 2016 • வருடச் சந்தா ரூ. 100/-



# பகவத் பாதை

தமிழ் மாத இதழ்

## உள்ளே





“ ஆன்மிக உலகின் ஆரம்பகால பாடத்திட்டங்களில் முயற்சி முக்கியமானது; அடைய வேண்டியது முக்கியமானது; உபதேசங்கள் கூட முக்கியமானவைதான்.

ஆன்மிக உலகின் கடைசிப் பாடம் அடைய வேண்டியவை அனைத்தையும் காலி செய்து விடவேண்டும். உபதேசங்கள் அனைத்தையும் விட்டுவிடவேண்டும். இவை அனைத்தையுமே புறக்கணித்து விடுவதுதான் கடைசிப் பாடம்.

– ஸ்ரீ பகவத்

# இறைவனடி சேர்ந்தார்

ஆத்மஞானி தேனி சுவாமி அவர்கள் பங்குனி மாதம் 7ம் தேதி பிரதோஷம் (20.03.2016) ஞாயிறு அன்று காலை சமாதி அடைந்தார். தூல உடலோடு நம்மோடு வாழ்ந்து வந்த அவர், இனி சூட்சுமமாக இருந்து நமக்கு துணைபுரிந்து ஆசி வழங்குவராக..


ஸ்ரீ பகவத் மிஷன்

31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம் – 3.

கைப்பேசி : 9994205880, 9789165555.


கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? அல்லது பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com






# குருவைக் கொள்(ல்)

நாம் ஒரு மலைப்பிரதேசத்துக்கு சுற்றுலா சென்றிருக்கிறோம். மலைப்பாதை ஒன்றில் நடந்து செல்கிறோம். நமது பாதையில் நீரோடை ஒன்று குறுக்கிடுகிறது. அதை நாம் கடந்து சென்றாக வேண்டும்.

அங்கே நமக்கு எல்லாமே புதிது. தண்ணீரின் ஆழம் எவ்வளவு என்பது நமக்குத் தெரியாது. தண்ணீருக்கு அடியில் பாறைகளோ குழிகளோ உள்ளனவா என்பதும் நமக்குத் தெரியாது.

துணிச்சல் மிக்க இளைஞர் ஒருவர் முன்னே செல்கிறார். அவருக்கும் அந்த ஓடை புதிது தான். ஆனாலும் அவர் துணிச்சலாக முன்னேறிச் செல்கிறார். நடக்கும் போது சில இடங்களில் பாறைகள் இடறுகின்றன. சில இடங்களில் ஆழமான குழிகள் உள்ளன. அவற்றாலும் அவர் பாதிக்கப்படுகிறார்.

அந்த அனுபவத்தின் மூலம் அவர் அவருக்குப் பின்னால் நடந்து வருபவர்களுக்கு வழிகாட்டி எச்சரிக்கிறார்.

இந்த இடத்தில் பாறைகள் உள்ளன. இந்த இடத்தில் குழிகள் உள்ளன. ஜாக்கிரதையாகக் கால்களை எடுத்து வையுங்கள். தடுமாறி விழுந்து விடாதீர்கள்.

–இப்படி வழிநடத்துகிறார்.

அவர் இப்படி முன்னால் நடந்து சென்று வழிகாட்டுவது பின்னால் வருபவர்களுக்கு மிகவும் உதவியாக இருக்கிறது. இல்லாவிடில் பலரும் தடுமாறி விழுந்து விடும் அபாயம் உள்ளது.

இப்படி ஒவ்வொரு துறையிலும் நமக்கு ஒரு முன்னோடி தேவைப்படுகிறது. அப்படி ஒரு முன்னோடி நமக்கு இருக்கும் பட்சத்தில் நமது செயல்பாடு மிகவும் சுலபமாகி விடுகிறது.

ஆன்மிகப் பாதை இதற்கு விதிவிலக்கு அல்ல. ஆன்மிகப் பயணத்திற்கும் இத்தகைய வழிகாட்டி தேவைப்படுகிறது.

அந்தப் பயணத்தில் வழிகாட்டியாகச் செயல்படும் வேலை எனக்கும் கிடைத்துள்ளது.

ஒரு முறை நமது கூட்டம் ஒன்றில் அன்பர் ஒருவர் தர்மசங்கடமாகத் தோன்றும் கேள்வி ஒன்றை முன்வைத்தார். அவர் நம்முடன் அடிக்கடி தொலைபேசியில் தொடர்பு கொள்ளக் கூடியவர். அவர் வீட்டில் கூட அவர் ஒருமுறை கூட்டமொன்றுக்கு ஏற்பாடு செய்திருந்தார்.

எந்தக் கேள்வியையும் அவர் உரிமையுடன் கேட்கக்கூடியவர். அவர் நம்மிடம் தனிப்பட்ட முறையில் கேட்டு பதில் பெற்றிருக்கலாம். அவருக்கு என்ன தோன்றியதோ தெரியவில்லை. நாம் பலரும் அறிய பதில் கொடுக்க வேண்டும் என்று விரும்பி அந்தத் தனிப்பட்ட கேள்வியை Personal Question ஐ எழுத்து மூலமாக எழுதிக்கேட்டிருந்தார்.

ஆன்மிகத்திலுள்ள எவரும் பொதுவாக தம்மை முன்னிலைப்படுத்துவதில்லை. ஆனால் நீங்கள் உங்களை முன்னிலைப்படுத்தியுள்ளீர்கள். பகவத் மிஷன், பகவத் பாதை என்று அனைத்தையும் உங்கள் பெயரிலேயே வைத்துள்ளீர்கள். எதற்காக நீங்கள் இப்படி உங்கள் பெயரையே முன்னிலைப்படுத்தியுள்ளீர்கள்?

தற்போது பகவத் பவன் என்ற பெயரில் நாம் அனைவரும் தங்கியிருக்கும் விடுதி–ஆஸ்ரமம் ஒன்றை அமைத்துள்ளோம். இந்தப் பவன் உதயமாவதற்கு முன்னால் இந்தக் கேள்வி கேட்கப்பட்டிருந்ததால் பவனைப்பற்றி எதுவும் அந்தக் கேள்வியில் குறிப்பிடவில்லை.

நம்முடைய பாரம்பரிய சம்பிரதாயப்படி, தன்னைத் தாழ்த்தி இறைவனை முன்னிலைப்படுத்தும் முறையே பின்பற்றப்பட்டு வந்திருக்கிறது.

நான் சொல்லும் வார்த்தைகளெல்லாம் நாயகன் தன் வார்த்தைகளே, என்று வள்ளலார் தன் கருத்துகளை முன் வைக்கிறார்.

பிறகு தனது ஆரம்ப கால கருத்துகள் தவறானவை என அவரே அவரது கருத்துகளுடன் முரண்படுகிறார்.

மாடி வீடுகளில் மழைநீர் வெளியே கொட்டுவதற்கு ஜலதாரைகள் சிங்க வடிவிலோ, மீன் வடிவிலோ அமைந்திருக்கும். அந்தப் பொம்மைகளே தண்ணீரைக் கொட்டுவது போலிருக்கும். மழை தான் அவற்றின் வாய் வழியே வெளியே கொட்டும்.

இப்படி நான் பேசுவதெல்லாம் நானே பேசுவதல்ல அம்பாளே எனக்குள்ளிருந்து பேசுகிறாள்.

-இவ்வாறு இராமகிருஷ்ண பரமஹம்சர் கூறுகிறார்.

எவன் இராமனாகவும், கிருஷ்ணனாகவும் அவதரித்துள்ளாரோ அவனே இராமகிருஷ்ணனாகவும் அவதரித்துள்ளான் – இப்படியும் அவரே கூறுகிறார்.

அவரே அவதாரமாக இருக்கும் போது, ஏன் அவரே பேசுவதாகக் கூறியிருக்க கூடாது? அம்பாள் அவருக்குள்ளிருந்து பேசுவதாக ஏன் கூற வேண்டும்?

அக்காலத்துப் பாரம்பரியம் இப்படித் தான் உள்ளது. தன்னுடைய செயல்களோடும் கருத்துகளோடும் அமானுஷ்யங்களை இணைக்கும் போது தான் அவர்களுக்குத் திருப்தி ஏற்படுகின்றது.

ஆனால் உண்மைகள் எவையும் அமானுஷ்யமானவை அல்ல. அவை அனைத்தும் சாதாரணமானவை; அறிவுபூர்வமானவை; விஞ்ஞானபூர்வமானவை.

ஒவ்வொருவரும் அவரவர் கருத்துக்களுக்கு அவரவர்களே பொறுப்பு எடுத்துக் கொள்வதுதான் சரியானது. நடைமுறை யதார்த்தங்களோடு தொடர்புடையது.

நாம் கூறும் கருத்துகள் – விளக்கங்கள் சரியானதாகவும் இருக்கலாம் அல்லது தவறானதாகவும் இருக்கலாம். அதற்கு நாமே தான் பொறுப்பு எடுத்துக்கொள்ள வேண்டும்.

நான் கூறும் கருத்துகள் யாவும் இறைவன் கூறியவை என்று ஒருவர் கூறுவாரேயானால்

அது பலவிதமான பிரச்சினைகளுக்குக் காரணமாக அமைந்துவிடும்.

இறைவனே இப்படிக் கூறுகிறார் என்றால் என்ன பொருள்?

எனது கருத்துகளை எந்தக் கேள்வியும் கேட்காமல் அப்படியே ஏற்றுக் கொள் என்பதுதான் பொருள்.

கருத்துகள் முக்கியமானவையா / கருத்துளைப் பயன்படுத்துவோர் முக்கியமானவர்களா?

கருத்துகளை விடவும் கருத்துகளைப் பயன்படுத்துவோரே முக்கியமானவர்கள்.

அவர்களுக்காகக் கருத்துகளே தவிர, கருத்துகளுக்காக அவர்களல்ல.

கருத்துகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் அளவுக்குப் பயன்படுத்துவோருக்கு முக்கியத்துவம் கொடுக்காத காரணத்தினால் தான் பல கருத்துகளும் பயனற்றுப்போய் விட்டன.

பயன்படுத்துவோர் முக்கியத்துவம் பெறும் போது அவர்களுடைய தகுதி மற்றும் தன்மைக்கு ஏற்ப கருத்துகளை சீரமைத்து – ஒழுங்கு படுத்திக் கொடுக்க வேண்டுவது அவசியமாகிறது.

அஷ்டவக்ரகீதையில் இப்படி ஒரு வாசகம் உண்டு : மும்மூர்த்திகளே வந்து உனக்கு உபதேசம் செய்தாலும், அவற்றை மறந்தாலன்றி நீ உண்மையை தரிசிக்க முடியாது.

உபதேசங்களை மறந்துவிட வேண்டும் என்றால் உபதேசங்களைக் கேட்காமலேயே இருந்து விடலாமே.

– உபதேசிக்காமலேயே இருந்து விடலாமே?

எதையோ செய்து எதையோ அடைவது என்பது ஆன்மிக உலகத்தின் பாலபாடம் ஆரம்பக் கல்வி.

ஆன்மிக உலகின் உயர் கல்வி என்பது எதையும் அடையாதிருப்பதே.

– அடைவிடம் எதுவும் இல்லாதிருப்பதே.

–செய்வதற்கு எதுவும் இல்லாதிருப்பதே.

நாம் எந்த உபதேசங்களைப் பின்பற்றினாலும் அடைவிடம் தோன்றி விடுகின்றது.

அடைவதற்கு ஏதாவது ஒன்றை நாம் வைத்துக் கொண்டிருக்கும் வரை நாம் நம்முடைய மனதை இயக்க ஆரம்பித்து விடுகின்றோம்.

மனது சுதந்திரமாக இயங்க வேண்டும். அதனை நாம் இயக்கக் கூடாது. நிர்ப்பந்திக்க கூடாது.

மனதினுடைய எந்தப்பகுதியும் மனதை ஆட்டிப்படைக்க முயலக்கூடாது.

நாம் ஏதாவது ஓர் உபதேசத்தைப் பின்பற்றி நம் மனதை இயக்குவோமானால் நம் மனது இருமைத்தன்மை அடைந்து விடுகின்றது.

–இரண்டு துண்டுகளாகி விடுகின்றது.

–ஒரு பகுதி இன்னுமொரு பகுதியை அடக்கி ஆள முயல்கிறது.

நாம் ஒரு கனவு காணுவதாக வைத்துக்கொள்வோம். கனவில் ஒரு காட்சி. நாம் ஓர் அடர்ந்த காட்டுப் பகுதியில் இருக்கிறோம். அந்தக் காட்டுப் பகுதியிலுள்ள ஒரு நீர்த்தடாகத்தில் நாம் நீராடுகிறோம். அந்த நீருக்குள்ளிருந்த முதலையொன்று வாயைத் திறந்தவாறே நம்மை நோக்கி வருகிறது. அதனிடமிருந்து தப்பியோட நாம் முயல்கிறோம்.

இந்தக் கனவில் நாம் பலவற்றைப் பார்த்துள்ளோம். காட்டைப் பார்த்துள்ளோம்; நீர்த்தடாகம் உள்ளது; முதலை உள்ளது; இவற்றோடு சேர்ந்து நாமும் அங்கு இருக்கிறோம்.

இவற்றுள் எவையெல்லாம் கனவில் உருவாக்கப்பட்டவை? எவையெல்லாம் கனவினால் உருவாக்கப்படாதவை?

இவை அனைத்தும் கனவுதான் காரணம். நான் என்னும் நம்முடைய அம்சமும் அந்தக் கனவினால் தான் உருவாக்கப்பட்டுள்ளது.

நான் என்னும் நம்முடைய அம்சந்தான் அந்தக் கனவின் நாயகனாகச் செயல்படுகிறது.

அதற்கு ஏற்படும் நிகழ்வுகள் தான் கனவாக அமைந்துள்ளது.

அந்தக் கனவு ஏற்படுத்திய பல கதாபாத்திரங்களுள் நான் என்பதும் ஒன்று.

அந்தக்கனவு தான் காட்டை உருவாக்கியுள்ளது; தடாகத்தை உருவாக்கியுள்ளது; முதலையை உருவாக்கியுள்ளது.

–அவற்றோடு சேர்த்து. நான் என்ற நம்மையும் உருவாக்கியுள்ளது.

கனவினால் உருவாக்கப்பட்ட ஒரு கதாபாத்திரம் மட்டுமே இந்த நான். அந்தக் கதாபாத்திரமான நான் அந்தக் கனவுக்கு ஏற்றவாறு அமைந்துள்ளது. அந்தக் கனவுக்குக்கட்டுப்பட்ட ஒரு கதாபாத்திரம்தான் இந்த நான். அந்தக் கதாபாத்திரத்துக்குக் கட்டுப்பட்டதன்று.

கனவைப் போன்றே நம்முடைய நனவு நிலையும் செயல்படுகிறது.

நம் மனதில் எத்தனையோ உணர்ச்சிகள் – மகிழ்ச்சி, துயரம், ஆசை, கோபம் போன்ற உணர்ச்சிகள் – நினைவுகள் தோன்றுகின்றன. அவற்றுள் ஒன்றாகத்தான் நான் என்னும் உணர்ச்சியும் தோன்றுகின்றது.

கனவில் வரும் கதாபாத்திரமான நான் என்னும் அம்சத்தால் எப்படி அந்தக் கனவை மாற்றியமைக்க முடியாதோ,

அப்படியே நனவில் தோன்றும் நான் எனும் அம்சத்தால் மன இயக்கத்தையும் மாற்றியமைக்க முடியாது.

அப்படி மாற்றியமைக்க அந்த நான் முற்படும் போது

நான் என்பது ஒரு பகுதியாகவும், மனதின் பிற இயக்கங்கள் இன்னுமொரு பகுதியாகவும் மாறி விடுகிறது.

–மனதின் ஒரு பகுதி இன்னுமொரு பகுதியைக் கட்டுப்படுத்தப் போராட ஆரம்பித்து விடுகிறது.

நான் எனும் இந்த அம்சமானது எதையாவது அடைய முயலுமேயானால்

அது தன்னையே – தன் மனதையே இரண்டாக்கும் போராட்டமேயாகும்.

எதையோ அடைய முயல்வதன் மூலம் அந்த நான் தன்னையே தனிமைப் படுத்திக் கொள்கிறது.

மனதால் – நினைவால் உருவாக்கப்பட்ட நான் நிரந்தரமானதல்ல. அது தோன்றி மறையக்கூடியது.

அது எதையாவது அடைய முயல்வது என்பது அது தன்னை நிரந்தரமாக வைத்துக் கொள்ளும் முயற்சியே ஆகும்.

–அது தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்ளும் ஒரு குழப்பமே ஆகும்.

நான் என்னும் அது எதனையும் அடைய முயலாதிருக்கும் போது

தன்னையும் இழந்து விடுகின்றது.

அதுவே தன்னை இழந்த நலம் என்று சாஸ்திரங்களால் விவரிக்கப்படுகின்றது.

நான் மறைந்து விடுவதால், நான் என்பதே இல்லாமல் போய் விடுவதில்லை.

நான் என்பது தேங்கி நிற்காமல், கணந்தோறும் புதுப்புது நான் தோன்றும் பிரவாக நானாக மாறிவிடுகிறது.

அனுபவங்கள் அனைத்தும் பிரவாகமாக ஓடுவதைப்போல்

அனுபவிப்பவனாகிய நான் எனும் அம்சமும் பிரவாகமாக மாறி விடுகிறது.

இந்த நான் எதையாவது அடைய முயலுமேயானால், நான் எனும் பிரவாகம், தனது பயணத்தில் ஒரு தடங்கலைச் சந்திக்கிறது.

நம் மனது திரவமாக இயங்குவது தான் சரியானது.

– பிரவாகமாக இயங்குவது தான் சரியானது.

அடைவதற்கு எதையாவது வைத்திருப்பது என்பது ஓர் உறை நிலையை ஏற்படுத்துவதே ஆகும்.

ஆன்மிக உலகின் ஆரம்பகால பாடத்திட்டங்களில் முயற்சி முக்கியமானது;

அடைய வேண்டியது முக்கியமானது; உபதேசங்கள் கூட முக்கியமானவைதான்.

ஆன்மிக உலகின் கடைசிப் பாடம் அடைய வேண்டியவை அனைத்தையும் காலி செய்து விடவேண்டும்.

– உபதேசங்கள் அனைத்தையும் விட்டுவிடவேண்டும்.

உபதேசங்களுக்கே வேலை இல்லாத போது

உபதேசிப்பவர்களுக்கு என்ன வேலை.

குருவைக் கொள்வது ஆன்மிக உலகின் முதலாவது பாடம்.

அந்தக் குருவையும் கொன்று விடுவது தான் ஆன்மிக உலகின் கடைசிப்பாடம்.

ஆன்மிக சாதனை, ஜபம், தவம், யாகம், ஞானம், முக்தி இவை அனைத்தும் ஆரம்பகாலப் பாடங்கள்.

இவை அனைத்தையுமே புறக்கணித்து விடுவதுதான் கடைசிப் பாடம்.

நாம் நின்று கொள்வதற்கு என எந்த இடமும் இருக்கக் கூடாது.

பயணம் மட்டுமே அங்கிருக்க வேண்டும்.

– பிரவாகம் மட்டுமே அங்கிருக்க வேண்டும்.





# கற்பனையும் புரிதலும்

V.A.P. சரவணன் (சேலம்)
செல் : 99942 05880

கல்லூரியில் Visual Communication இறுதி ஆண்டு படிக்கும் இளைஞர் ஒருவருக்கு ஏற்பட்ட உடல் பாதிப்பிலிருந்தும் அதனால் ஏற்பட்ட மனப்பாதிப்பிலிருந்தும் விடுபட நமது பகவத் ஐயாவின் புரிதல் எவ்வாறு உதவியது என்பது பலருக்கும் பயனுள்ள வகையில் உதவும் என்ற எண்ணத்தில் இதை பகிர்கிறேன்.

**இனி அந்தக் கல்லூரி மாணவர்.....**

"நான் Visual Communication இறுதி ஆண்டு படிக்கும் இளைஞன். எனது லட்சியம் சினிமா Director ஆவது, நிறைய Short Film எடுப்பது. எனது கற்பனைகள் ஒவ்வொன்றையும் Visual செய்து பார்ப்பது என்னுடைய வழக்கம். நான் கடந்த ஒரு மாதத்திற்கு முன்பாக இரவு நேர உணவாக சில்லி, காளிப்பிளவர் மற்றும் ஆயில் அதிகமான உணவுப் பொருட்கள் எடுத்துக் கொண்டேன். உணவு உட்கொண்ட பிறகு தலை சுற்றல், லேசான கிறுகிறுப்பு, ஒரு மாதிரியாகக் கண்கள் இருட்டுவது எனப் பயமாக இருந்தது. நள்ளிரவிலிருந்து தொடர்ந்து அதிகாலை வரை சரியான உறக்கமின்றி தவித்தேன், பிறகு உறங்கினேன். அதனால் அடுத்த நாள் இரவு எளிமையான உணவு எடுத்துக் கொண்டேன். அப்போதும் தலை சுற்றல், கிறுகிறுப்பு, கண்கள் இருட்டுவது என அனைத்தும் இருந்தது. தூக்கமின்றி தவித்தேன். இதே நிலைதான் ஒரு வாரத்திற்கு மேல் நீடித்தது. மிகவும் கஷ்டப்பட்டேன். எனக்கு ஏதோ நடக்கக் கூடாத ஒன்று நடப்பதாக எண்ணிக்கொண்டேன். கல்லூரி Hostel-லில் இருக்க முடியாமல் வீட்டிற்கே வந்துவிட்டேன்...

"வீட்டிற்கு வந்த பிறகு உடல் பரிசோதனைகள் அனைத்தையும் ஒரு பெரிய மருத்துவமனையில் எடுத்துக் கொண்டேன். உடல் பரிசோதனைகள் எல்லாம் நன்றாக இருப்பதாகவும், எந்தத் தொந்தரவும் இல்லை என்றும், மேலும் ECG என்னும் இதயத்திற்கான பரிசோதனையும் செய்துகொண்டேன். அதுவும் சரியாகவே இருப்பதாக கூறினார் மருத்துவர். உடலில் எந்தவிதமான தொந்தரவும் இல்லை, மனதில் தான் ஏதோ பிரச்சினை இருக்கிறது என்று Doctor கூறிவிட்டு, தன்னுடைய நண்பரான மனநல மருத்துவரிடம் என்னை அனுப்பி வைத்தார். மனநல மருத்துவரைப் போய் பார்த்தேன். அவர் என்னுடைய நிலையை எல்லாம் கேட்டுவிட்டு Panic Attack, GAD என்று தன் அருகில் இருக்கும் மற்றோரு Doctor யிடம் கூறினார்...

"பிறகு கண்களை கொஞ்ச நேரம் மூடி அமைதியாக இருங்கள் என்றார் Doctor. கண்கள் மூடிய உடன் எனக்கு என்னுடைய பயம் தான் நினைவுக்கு வந்தது. Doctor, 'எப்படி இருக்கிறது?' என்று கேட்டார். எனக்கு அந்தப் பயம் மட்டுமே இருப்பதாகக் கூறினேன். 'தம்பி உங்களால் வீட்டில் போய் இருக்கமுடியுமா? அல்லது மருத்துவமனையில் ஒரு நான்கு நாட்கள் இருந்து பார்க்கிறீர்களா?' என்று கேட்டார். 'நான் மருத்துவமனையிலேயே இருந்து சரி செய்து கொள்கிறேன்.' என்று கூறிவிட்டேன். நான்கு நாட்கள் எனக்கு Injection, தூக்க மாத்திரைகள் கொடுத்தார்கள். ஒரு வாரமாக தூங்காத நான் நன்றாகத் தூங்கினேன். நான்கு நாட்களும் ஒரே போதையாகவே இருந்தது. என்ன நடந்தது என்றே தெரியவில்லை. ஒரே தூக்கமாக இருந்தது. நான்காம் நாள் முடிவில் எனக்கு 15 நாட்களுக்கு மாத்திரை எழுதிக் கொடுத்து வீட்டுக்கு அனுப்பினார்கள்...

"வீட்டிற்கு வந்த பிறகு நான் தூக்கமாத்திரைகள் சாப்பிடுவது சரியல்ல உடல் நலனுக்கு ஏற்றதல்ல. தூக்க மாத்திரைகள் இல்லாமல் நாம் நம்மை சரி செய்து கொள்ள வேண்டும் என்று முடிவு எடுத்தேன். அப்போது தான் Doctor-கூறிய GAD என்றால் என்ன என்பதை Internet -மூலம் (இணைய தளத்தில்) தெரிந்து கொண்டேன். இணையதளத்தில் கிடைத்த தகவல் (General Anxiety disorder) தேவையற்ற பயம், உடல் வேர்த்தல், தூக்கமின்மை, நாமாகக் கற்பனையாக ஏதோ நடந்து விடுமோ என்று எண்ணுவது, மேலும் தற்கொலை பற்றி எண்ணம் தோன்றுவது. தற்கொலையைப் பற்றி அதிகமாகச் சிந்திப்பது, முயற்சி செய்வது போன்றவை எனக் குறிபிட்டு இருந்தது...

"இந்த Internet தகவல்கள் அனைத்தும் தெரிந்து கொண்ட பிறகு அவைகள் அனைத்தும் எனக்கு இருப்பது போல் தோன்றியது. அதுவரை எனக்குத் தற்கொலை பற்றிய எண்ணம் இல்லை. படித்த பிறகு நமக்குத் தற்கொலை பற்றிய எண்ணம் தான் இனி அடுத்தது ஏற்படும். பிறகு அதைப் பற்றிச் சிந்திப்போம் என நானாக நினைத்துக் கொண்டேன். என்னை அறியாமல் Internet -ல் சேகரித்த அனைத்துத் தகவல்களிலும் மூழ்கிவிட்டேன். நான் என்னுடைய பழைய நிலையை விட மேலும் மோசமான நிலைக்குப் போய் விட்டதாக நினைத்துக் கொண்டேன். இனி கடவுள் தான் ஒரே வழி என்று முடிவு செய்துவிட்டேன்...

"பழனி முருகன் கோவில், எங்களது குலதெய்வமான செல்லாண்டி அம்மன், கோட்டை மாரியம்மன். ஆஞ்சநேயர் கோயில், அய்யனார் கோயில், கருப்பண்ண சாமி கோயில், பாடம் போட்டு மந்திரித்தல், மசூதிக்குச் சென்று ஓதி சீட்டு கட்டுதல், தாயத்து, மந்திரக்கயிறு என எல்லாம் கட்டிக்கொண்டேன். மந்திரிப்பவரும் மசூதியிலும், 'தம்பி நீங்கள் பயந்திருக்கிறீர்கள்' என்று கூறினார்கள். எது செய்தும் எனக்கு பயம் மட்டும் போகவில்லை. இந்தப் பயத்தினால் தூக்கமும் இல்லை...

"இந்தப் பயத்தைப் போக்க, இரவு நேரங்களில் தூங்காமல் இருக்கும் போது நான் படித்த Visual Communication-ல் எப்படி Short Film எடுப்பது, எப்படிக் காட்சிகள் அமைப்பது, Camera எப்படி அமைப்பது, Lighting எப்படி இருக்க வேண்டும், Background எப்படி இருக்க வேண்டும் என நானாகக் கற்பனையாக Visuval செய்து பார்ப்பேன். இப்படி நான் பண்ணி Visuval செய்து பார்த்துக்கொண்டே விடியற்காலை 5 அல்லது 6 மணிக்கு பிறகு தான் தூங்கத் தொடங்குவேன். பிறகு 9 அல்லது 10 மணிக்குத் தான் எழுவேன்...

"இந்தத் தற்கொலை எண்ணத்தை மாற்ற கோவிலுக்குப் போவேன், பிறகு Tv யில் காமெடி பார்ப்பது, தூங்குவதற்காக முயற்சி செய்வது என எல்லா முயற்சிகளையும் செய்வேன். ஆனால் அந்த எண்ணம் மட்டும் திரும்பத் திரும்ப வரும்.

அதிலிருந்து மட்டும் என்னால் மீளவே முடியவில்லை...

"நான் Internet-ல் சேகரித்த தகவல் எதுவும் எனக்கில்லை என்று எனக்கு நானே சொல்லிக் கொள்வேன். அந்தத் தகவல்கள் எல்லாம் பொய், பொய், என்று எனக்கு நானே கூறிக்கொள்வேன்...

"நான் நன்றாகத் தூங்கினால் தான் உடல் ஆரோக்கியம் பெறும் அதேபோல் இந்த எண்ணம் இல்லாமல் இருந்தால் தான் மனம் நிம்மதியாக இருக்கும். இந்த இரண்டும் தான் ரொம்ப முக்கியம் என முடிவு செய்தேன். அதற்காக எல்லா முயற்சிகளையும் மேற்கொண்டேன்." இப்படித் தன்னுடைய நிலையை சரவணன் ஆகிய என்னிடம் அந்தத் தம்பி கூறினார்.

உங்களுக்கு என்ன ஏற்பட்டுள்ளது என்பதை நான் கூறுகிறேன் சரியா என்று கூறுங்கள் என்றேன்.

"அதாவது நீங்கள் முதன் முதலில் இரவு Oil Food உணவாக எடுத்துக்கொள்கிறீர்கள். அன்று இரவு உடல் ஒரு மாதிரியாக இருக்கிறது, அதனால் தூக்கம் இல்லை, சரிதான். உடலுக்கு Oil உணவு ஒத்துப்போகவில்லை. அடுத்த நாள் எளிமையான உணவு எடுத்துக்கொண்ட போதும் அதே போல் மனதில் பயம் ஏற்படுகிறது. அப்படி என்றால் உடலில் எந்த பிரச்சினையும் இல்லை. மனதில் தான் பிரச்சினை என்பது தெளிவாகப் புரிந்து கொள்ளமுடிகிறது...

"பொதுவாக எந்த விசயத்தையும் Visual செய்து பார்ப்பது உங்களின் பழக்கம். இப்படி உங்களுக்கு ஒரு நாள் நேர்ந்த உடல் தொந்தரவை நீங்களாக Visual செய்து பார்க்கிறீர்கள், தூக்கம் குறைகிறது. அதனால் உடலில் அதிகமாகப் பாதிப்புகள் தெரிகின்றன. ஒரு வாரமாக இப்படி Visual செய்து உங்களின் வேண்டாத எண்ணத்தைப் பலப்படுத்தி விடுகிறீர்கள். கிட்டத்தட்ட அந்த எண்ணத்திற்க்கு நீங்களே உயிர் கொடுத்துவிடுகிறீர்கள்...

"பிறகு மருத்துவமனைக்குச் சென்று உடல்நலமாக இருப்பதை உறுதி செய்து கொள்கிறீர்கள். உடலில் பிரச்சினை இல்லை மனதில் தான் பிரச்சினை என்பதை தெரிந்து கொள்கிறீர்கள். மன நல Doctor கூறிய GAD என்றால் என்ன என்பதை Internet-ல் தெரிந்துகொள்வதின் மூலம் உங்கள் எண்ணத்திற்கு மேலும் உறுதிப்படுத்திவிடுகிறீர்கள். பிறகு அந்த எண்ணத்தை மாற்ற எல்லா கோவில்களுக்கும் செல்கிறீர்கள். மந்திரித்துக் கயிறு கட்டிக்கொள்கிறீர்கள். மசூதியில் ஓதி தாயத்து கட்டிக் கொள்கிறீர்கள். காமெடியை TV-யில் பார்த்து இந்த எண்ணத்தை மாற்றமுயற்சி செய்கிறீர்கள். இணையதளத்தில் சேகரித்த செய்திகள் உண்மையல்ல, பொய் என்று உங்களுக்கு நீங்களே கூறிக்கொள்கிறீர்கள். இப்படி எல்லா வகையிலும் அந்த எண்ணத்தை நேர்முகமாக, எதிர்முகமாக என எல்லாவகையிலும் எதிர்த்துப் போராடி அந்த எண்ணத்திற்கு உயிர் கொடுத்து விடுகிறீர்கள். அந்த எண்ணம் வெளிவர வேண்டாம், வெளிவர வேண்டாம், என்று அந்த எண்ணத்தை வீரியப்படுத்தி விடுகிறீர்கள்.

இது போகவும் உங்கள் படிப்புத் துறையான Visual லிலும் உங்களுக்கு நடப்பதை பலமுறை Visual செய்து பார்க்கிறீர்கள். சினிமாவில் வரும் காட்சியை செய்து பார்க்க வேண்டிய நீங்கள் உங்களுக்குள் நடப்பதையும் Visual செய்து பார்க்கிறீர்கள். இப்படி அடிக்கடி Visual செய்து பார்ப்பதால் பிரச்சினை பெரிதாகி விடுகிறது. அதிலிருந்து எப்படி மீள்வது என்பது உங்களுக்கு தெரியாமல் இருப்பதுதான் உங்களுடைய பிரச்சினை" என்றேன். "ஆமாம், ஆமாம் சரிதான்" என்றார் தம்பி.

GAD பற்றிய இணையதளத்தில் சேகரித்த தற்கொலை பற்றிய ஒரு எண்ணம் தானாக தோன்றுகிறது. அப்படி ஏற்பட்ட தற்கொலை பற்றிய எண்ணத்தை உங்களுடைய சுய நினைவின்றி Unconscious-ஆக Visual செய்து பார்க்கிறீர்கள். பிறகு சுயநினைவுக்கு வந்த பிறகு Conscious -ஆக Visual செய்து பார்க்க வேண்டிய அவசியமில்லை. நாம் சுய நினைவுக்கு வந்த பிறகு மேற்கொண்டு தற்கொலை பற்றிய எண்ணத்தை சிந்திக்க வேண்டிய அவசியமில்லை என்பதைப் புரிந்து கொண்டால் போதும். முதலில் தானாக ஓர் எண்ணம் தோன்றுகிறது. பிறகு வந்த எண்ணத்தைக் கொஞ்ச நேரம் சுயநினைவின்றி சிந்தித்தப் பிறகு சுயநினைவுக்கு வந்தவுடன் மேற்கொண்டு சிந்திக்க வேண்டிய அவசியமில்லை என்பதைப் புரிந்து கொள்கிறோம். நம் சுயநினைவுக்குத் தெரியும் போதெல்லாம் நாம் அதிலிருந்து விடுபட்டால் போதும் காலப்போக்கில் அந்த வேண்டாத எண்ண அழுத்ததிலிருந்து தன்னாலே விடுபடுவோம் என்று கூறினேன்.

தம்பி மிகவும் நன்றாகப் புரிந்து கொண்டதாகக் கூறினார். "எப்படி விடுபடுவது என்பது தெரியாமால் தடுமாறினேன். நீங்கள் சரியாக வழி செய்து விட்டீர்கள் நன்றி" என்று கூறினார். மேலும் இதையே ஓர் Short film ஆக எடுக்கப் போவதாகவும் கூறினார்.

ஒரு வாரம் கழித்து மீண்டும் தொடர்பு கொண்டு சுய நினைவுக்கு வந்த பிறகு பல விசயங்களில் அழுத்தம் குறைந்து விட்டதாகவும், ஆனால் ஏதோ சில விசயத்தில் மட்டும் சுய நினைவுக்கு வந்த பிறகும், அறிவிற்கு நன்றாக தெரிந்த பிறகும் சிந்திப்பதிலிருந்து விடுபட முடியாமல் கஷ்டப்படுவதாகவும் கூறினார். இந்த நிலையில் நான் என்ன செய்வது? எப்படி இதிலிருந்து வெளிவருவது? எனக் கேட்டார் தம்பி.

"நீங்கள் சுயநினைவுக்கு வந்த பிறகும், உங்களின் அறிவுக்குத் தெரிந்த பிறகும், சிந்திப்பதை விடமுடியாமல் தவிப்பதைத் தான் கூறுகிறீர்கள். மேற்கூறிய அனைத்தும் நன்றாகத் தெரிந்த பிறகும் தெரிந்தே சிந்திக்கிறோம். நம்மால் முடிந்திருந்தால் நிச்சயம் நாம் சிந்திக்காமல் விட்டிருப்போம். அதையும் மீறி தெரிந்தே சிந்திக்கிறோம் என்றால் அந்த விசயத்தைப் பற்றிய எண்ணம் அந்த அளவிற்கு அழுத்தமாக உள்ளது என்பதே பொருள். நமக்குத் தெரிந்தே விடுபட முடியாமல் சிந்திப்பதைக் கூட சுயநினைவின்றி சிந்திப்பதாக எடுத்துக்கொள்ளுங்கள். அப்படி நீங்கள் எடுத்துக் கொள்ளும் போது அதன் அழுத்தம் மேலும் நீடிக்காமல் குறையவே தொடங்கும்.

எப்படியோ காலப்போக்கில் அந்த எண்ணத்தின் அழுத்தமும் நிச்சயமாக குறையவே செய்யும்" என்று கூறினேன்.

"எனக்கு ரொம்பவே நன்றாகப் புரிகிறது. இருந்த ஒரு முக்கியமான சந்தேகமும் தீர்ந்தது" என்று நன்றியைக் கூறி முடித்தார் தம்பி.

**அகத்தில் சும்மா இரு**





# ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891-65555

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்,

மனித குலத்திற்குத் துன்பங்களிலிருந்து விடுதலை தரக்கூடிய மெய்ஞானத்தை மிக எளிமையாக்கி அனைவரும் பயனடையும் வகையில் புரிதலாக வழங்கி வருகிறார் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள். இதை நாம் புரிந்து கொண்டு பயனடைந்ததோடு உலகெங்கும் எடுத்துச் செல்லும் ஓர் உயர்ந்த பணிக்காக இணைந்து செயலாற்றிக் கொண்டிருக்கிறோம்.

அந்த வகையில் கனடாவில் வசித்து வரும் அன்பர் ஜெயராமன் அவர்கள் பகவத் ஐயாவின் அனைத்து ஆடியோ & வீடியோ உரைகளையும் Online-யிலும் Youtube-லும் ஏற்றியதோடு தற்போது நடைபெற்று வரும் ஐயாவின் அனைத்து உரைகளையும் உடனுக்குடன் Youtube-ல் ஏற்றி (Upload) தேடுதல் கொண்ட அனைவரும் பயன்பெறும் வாய்ப்பை ஏற்படுத்தி வருகிறார்.

இவர் ஏழு மாதத்திற்கு முன்பு தான் ஐயாவின் நூல்களைப் படித்து ஐயாவோடு அறிமுகமானவர். தன்னுடைய பல கால ஞானத் தேடுதலுக்குப் பகவத் ஐயா அவர்களால் தெளிவு பெற்றவர், தன்னைப் போல் ஞானத் தேடுதல் கொண்ட அனைவருக்கும் மிக விரைவாக கொண்டு செல்ல வேண்டும் என்று மிக ஆர்வமாக செயலாற்றிக் கொண்டிருக்கிறார்.

அதே போல் சென்னை வெஸ்ட் மாம்பலம் இரவிச்சந்திரன் ஐயா அவர்களும் ஐயா சென்னையில் இருக்கும் ஒவ்வொரு வாரமும் சனிக்கிழமை மெரினா கடற்கரையிலும் ஞாயிற்றுக் கிழமை தனது இல்லத்திலும் ஐயாவின் சத்சங்கத்தை ஏற்பாடு செய்து வருகிறார். இது பலருக்கும் பயன்படும் வகையில் அமைந்துள்ளது. மேலும் இந்த சத்சங்கங்களைக் கனடா திரு. ஜெயராமனோடு இணைந்து நேரடியாக Google Hanout-லும் ஒளிபரப்பி வருகிறார்கள். ஆர்வமுள்ளவர்கள் Google Hanout-மூலம் உலகின் எந்தப் பகுதியில் இருந்தாலும் ஐயாவின் சத்சங்கத்தில் கலந்து கொள்வதோடு ஐயாவோடு கலந்துரையாடலிலும் ஈடுபடலாம். இந்த மாபெரும் பணியை செய்து வரும் கனடா திரு. ஜெயராமன் அவர்களுக்கும், திரு. ரவிச்சந்திரன் ஐயா அவர்களுக்கும், இவர்களுக்குத் துணை நிற்கும் சென்னை மற்றும் பெங்களூரு அன்பர்கள் அனைவருக்கும் நம் அனைவரின் சார்பிலும் பாராட்டுக்களையும் நன்றியையும் தெரிவித்துக்கொள்கிறோம். Google Hanout-ல் இணைந்து ஐயாவின் சத்சங்கங்களில் நேரடியாகக் கலந்து கொள்ள விரும்புபவர்கள் bagavathpath@gmail.com என்ற மெயிலிலோ அல்லது jayaram.linux@gmail.com என்ற மெயிலிலோ தங்களது மெயில் ஐடியை தெரிவித்து கலந்து கொள்ளலாம். மேலும் விபரம் பெற 944 440 2986 என்ற எண்ணில் தொடர்புகொள்ளவும்.

மேலும் **மே மாதம் 16 ஆம் தேதி தமிழகம் முழுவதும் நடைபெறும் தேர்தல் காரணமாக மே 12-ம் தேதி முதல் மே 15-ம் தேதி வரை நடைபெற இருந்த ஏற்காடு சிறப்பு ஞானமுகாம் மே 26-ம் தேதி முதல் மே 29-ம் தேதி வரையாக மாற்றப்பட்டுள்ளது.**

ஞானத் தேடுதல் கொண்டவர்களுக்கு ஞான முகாமில் கலந்து கொள்வதென்பது மிகவும் முக்கியமான ஒன்று. ஞானத்தை எல்லாக் கோணங்களிலும் புரிந்து கொள்வதற்கான வாய்ப்பு. ஐயாவின் சத்சங்கத்தில் கலந்துகொண்டாலும் கூட ஞான முகாமில் கலந்துகொள்வது மிகவும் அவசியம். ஞானத்தைத் தெள்ளத் தெளிவாகப் புரிந்துகொள்வதற்கும் அதை உறுதிப்படுத்திக் கொள்வதற்கும் ஞானமுகாம் பேருதவியாக இருக்கிறது. பொதுவாக ஞானமுகாம் 3 நாட்கள் நடைபெறும். இந்த ஏற்காடு ஞானமுகாம் நான்கு நாட்கள் ஏற்பாடு செய்துள்ளோம். கோடை விடுமுறையில் நடைபெறுவதாலும் கோடையின் வெப்பத்தைத் தணிக்க சுற்றுலா தலமான ஏற்காடு மலைப் பிரதேசத்தில் நடைபெறுவதாலும் வாய்ப்புள்ளவர்கள் அனைவரும் கலந்து கொள்ளலாம்.

முதல் நாள் வியாழக்கிழமை, ஞானமுகாமில் கலந்துகொள்பவர்கள் அனைவரும் ஞானமுகாம் நடைபெறும் இடத்திற்கு மாலையில் வந்து சேர்ந்து ஒன்று கூடி அறிமுக வகுப்புக்குப் பின் ஓய்வு எடுப்பதோடு நிறைவடைகிறது. வெள்ளிக்கிழமையிலிருந்து ஐயாவின் ஞானவகுப்புகள் தொடங்கும்.

**ஞானமுகாமில் கலந்து கொள்பவர்கள் ஞானமுகாம் நடைபெறும் இடத்திற்கு வியாழன் மாலையோ இரவுக்குள்ளோ வந்து சேர்வதே உகந்தது. அப்போது தான் நன்றாக ஓய்வெடுத்து வெள்ளிக்கிழமை ஐயாவின் வகுப்பில் நன்றாகக் கவனத்தைச் செலுத்த முடியும். வெள்ளிக்கிழமை முதல் வகுப்பாக ஞானம் பெறுவதில் மிக முக்கியமான மையப் பகுதிகளான (Important Subjects) ஞானப் புரிதல், அகம் புறம் ஆகிய தலைப்புகளில் ஐயா உரையாற்றி அது சம்பந்தமான அன்பர்களின் கேள்விகளுக்குப் பதில் அளிக்க உள்ளார்கள்.**

**வெள்ளிக்கிழமை காலையில் வந்தால் பயணக் களைப்பிலும் சோர்விலும் ஐயாவின் உரையை சரியாகக் கவனிக்க முடியாமல் போய்விடும்.**

**எனவே ஞானமுகாமில் கலந்து கொள்பவர்கள் வியாழக்கிழமை (26-05-2016) மாலைக்குள் ஞானமுகாம் நடைபெறும் இடத்திற்கு வந்திருந்து நன்கு ஓய்வெடுத்து வெள்ளிக்கிழமை நடைபெறும் முக்கிய வகுப்புகளில் முழுமையாகத் தங்களை ஒப்புவித்து முழு பயனையும் அடைய வேண்டுகிறோம்.**

நமது ஞானமுகாமின் நோக்கமே, வருகிறவர்கள் எந்த மனநிலையில் வந்தாலும் ஞானமுகாம் நிறைவு பெற்றுச் செல்லும் போது விடுதலை பெற்ற மனத்துடன் சென்று வாழ்வை முழுமையாக வாழவேண்டும் என்பதே.

எனவே வாய்ப்புள்ளவர்கள் அனைவரையும் ஞானமுகாமில் கலந்து பயன் பெற அழைக்கின்றோம்.




# நன்றியும் வேண்டுகோளும்

நமது ஸ்ரீ பகவத் பவன் ஆஸ்ரமம் சேலம் திருவருட்சோலையில் தேனி சுவாமிகள் மற்றும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆசியோடும் நமது ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களாகிய உங்களின் பங்களிப்பாலும் ஒத்துழைப்பாலும் கீழ்த் தள வேலைகளும் முகப்பு வேலைகளும் சிறப்பாக நிறைவு செய்யப்பட்டு 20.1.2016 அன்று நமது ஞான குருமார்களால் திறந்து வைக்கப்பட்டது.

திறப்பு விழாவிற்குப் பிறகு ஆஸ்ரமத்தின் முதல்தளம் மற்றும் இரண்டாம் தளத்தின் மீதி வேலைகளையும் விரைவாக முடிப்பதற்கான வேலைகளை இடையறாது செய்து வருகிறோம்.

ஏற்காடு ஞான முகாமைத் தொடர்ந்து பகவத் ஐயா அவர்கள் ஸ்ரீ பகவத் பவனில் தங்ககுவதாக எண்ணியுள்ளார்கள். அதற்குள் அனைத்து வேலைகளும் நிறைவடைந்துவிடும்.

உலக மக்கள் அனைவரும் ஐயாவைச் சந்தித்து பகவத் பவனில் தங்கியிருந்து தெளிவு பெற்றுச் செல்ல வேண்டும் என்ற நோக்கத்தில் அமைக்கப்பட்டது தான் நமது ஆஸ்ரமம்.

இந்தக் கட்டடப்பணியை இவ்வளவு விரைவாகவும் நிறைவாகவும் செய்து முடிக்க நமது வேண்டுகோளுக்கு செவிசாய்த்து தங்களது பங்களிப்பாக நன்கொடைகளை வழங்கிய அனைத்து நல்ல உள்ளங்களுக்கும் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

மேலும் கட்டடப்பணியை முடிக்கும் இறுதிக் கட்டத்தில் நிதி தேவைப்பாடு அவசரமாக இருந்த சூழ்நிலையில் ஏற்கனவே நன்கொடைகள் வழங்கியிருந்த பட்சத்திலும் கூட மேலும் வட்டியில்லா கடனாகவும், நன்கொடைகளாகவும் வழங்கிய

சென்னை திரு. **சம்பந்த முதலியார் & வடிவு அம்மாள்** தம்பதியினர்,

சென்னை திரு. **சரவணன் & முத்துலட்சுமி** தம்பதியினர்,

கரூர் திரு. **சிவகுரு** ஐயா

பரமத்திவேலூர் திரு. **பாலசுப்ரமணி** ஐயா,

பரமத்திவேலூர் திரு. **இராஜகோபால்** ஐயா,

கனடா திரு. **ஜெயராம்** ஐயா, மற்றும்

நெல்லை திரு. **மூர்த்தி** ஐயா ஆகிய அனைவருக்கும் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

வட்டியில்லாக் கடனாக பெறப்பட்ட தொகையை இரண்டு ஆண்டுக்குள் செலுத்த திட்டமிட்டுள்ளோம்.

அதனை இரண்டு ஆண்டுகளில் நமது பகவத் பவனுக்கு வரும் நன்கொடைகளையும், ஐயாவின் நூல் விற்பனையில் வரும் வருமானத்தையும் வைத்து திருப்பிச் செலுத்த திட்டமிட்டுள்ளோம்.

அதற்கு ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களாகிய தாங்கள் அனைவரும் ஒத்துழைப்பு வழங்குமாறு வேண்டிக் கேட்டுக்கொள்கிறோம்.

– நன்றியுடன் ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.

இதுவரை நன்கொடையாக ரூ.25,000/-மும் அதற்கு மேலும் கொடுத்து தங்களை ஸ்ரீ பகவத் பவன் ஆஸ்ரமத்தின் நிறுவனர்களாக **(Founders)** இணைத்துக் கொண்டவர்கள்...

## ஆத்மஞானி **தேனிசுவாமி** மற்றும் **சுவாமி ஸ்வரூபானந்தா** இவர்களோடு...

1. திரு. **இராஜகோபால்,** பரமத்தி வேலூர்.
2. திரு. **E.ராமு,** சென்னை.
3. திரு. **சிவகுரு,** கரூர்.
4. திரு. **S.முருகேசன்,** சென்னை,
5. திரு. **மகேந்திரலிங்கம்,** பொள்ளாச்சி.
6. திரு. **தியாகராஜன்,** சென்னை.
7. திரு. **முரளிக்கண்ணன்,** கோவை.
8. திரு. **ஜீவமணி,** சேலம்.
9. திரு. **சரவணன்,** சேலம்.
10. திரு. **இரத்தினசாமி,** திருப்பூர்.
11. திரு. **குணாலன்,** கோவை.
12. திரு. **வெங்கட்ராஜ்,** சேலம்.
13. திரு. **சுகுமார் & லில்லி** குடும்பத்தினர், சென்னை.
14. திரு. Dr. **நாராயணசாமி & செந்தமிழ்செல்வி** சென்னை.
15. திரு. Eng. **முரளி** சென்னை.
16. திருமதி.**வடிவுஅம்மாள் & சம்பந்த** முதலியார்
17. திரு. **முத்துச்செல்வன்,** காஞ்சிபுரம்.
18. திரு. **S.கதிர்வேலவன்,** சென்னை.
19. திருமதி. **சிவசங்கரி,** சென்னை.
20. திரு. **ரவிச்சந்திரன்,** வெஸ்ட் மாம்பலம், சென்னை
21. திருமதி. Dr. **விஜயலட்சுமி,** சென்னை
22. திரு. **S.பாலமுருகன்,** USA
23. திரு. **செந்தில்,** தர்மபுரி.
24. திரு. **சரவணன்-முத்துலட்சுமி,** குடும்பத்தினர், சென்னை.
25. திரு. **புலியூர் உடையான்,** சென்னை.
26. திரு. **சரவணன்,** புரசைவாக்கம்.
27. திரு. **சந்திரசேகர்,** வலசரவாக்கம்.
28. திரு. **வெங்கடேஸ்வரராவ்-சிந்தாநிலாதேவி,** பாண்டி.
29. திரு. **மாரிமுத்து,** சென்னை.
30. திரு. **சந்திரசேகர்** & சகோதரர் திரு. **திருமூர்த்தி**
31. திரு. **தேவா ஸ்ரீராம் & தேவாஸ்ரம்** வெள்ளாளப்பட்டி.
32. திரு. **அப்துல் சாகுல் ஹமீது** நாகர்கோயில்
33. திரு. **வேலுசாமி** பெங்களூரு.
34. திரு. **சுரேஷ்குமார்** சேலம்.
35. திருமதி. **S. லட்சுமி லாவண்யா** சேலம்.
36. செல்வி. **S. வைஷ்ணவி** சேலம்.
38. திரு. **முத்துச் செல்வன்** நாகப்பட்டிணம்.
39. திரு. **கார்த்திகேயன்** மற்றும் **குடும்பத்தினர்** சிங்கப்பூர்
40. திரு. **ரவிச்சந்திரன்** பொள்ளாச்சி.
41. திரு. **செந்தில்** (Nigeria) சென்னை.
42. திரு. **ஜெயராமன்** கனடா.
43. திரு. **பாபுலால்** பெங்களூரு.
44. திருமதி. **ஹேமா** அமெரிக்கா.
45. திரு. Dr.**ராஜசேகர்** திருச்சி.
46. திரு. **வேலுமணி** பெருந்துறை.
47. திரு. **உமர் பரூக்** கம்பம், தேனி.
48. திரு. **M.ராஜகோபாலன்** ( கோவை மாருதி பேப்பர் ) பரமத்தி.
49. திரு. **சசிகுமார்** கோவை.
50. திரு. **அன்புசேகர்** நெய்வேலி.
51. திருமதி. **தேவி,** மலேசியா.
52. திரு. **சீத்தல்குமார்,** மயிலாடுதுறை.
53. திரு. **பாலு,** பரமத்திவேலூர்.
54. திரு. **மணிவண்ணன்,** திருச்சி
55. திரு. **ரவிக்குமார்,** நாகப்பட்டணம்
56. திரு. **G. வெங்கடேஷன்,** மதுரை
57. திரு. **சுந்தரராமன்,** மும்பை
58. திரு. **சின்னம்மாள்,** நெல்லை
59. திரு. **கணேஷ்குமார்,** கோயில்பட்டி
60. திரு. **P.சுந்தரராஜன்,** சென்னை
61. திரு. **சிவக்குமார்,** காங்கேயம்
62. திரு. **ஜோசப் ஜெயராஜ்,** ஹைதராபாத்
63. திரு. **பழனியப்பா பிரபு,** கோவை
64. திரு. **மயில்வாகனம்,** மதுரை
65. திரு. **ரகு,** தர்மபுரி
66. திரு. **நாகராஜன்,** தூத்துக்குடி
67. திரு. **பெரியசாமி,** திருச்சி
68. திரு. **ரவி,** ஆந்திரா
69. திரு. **இராதாகிருஷ்ணன்,** சிங்கப்பூர்
70. திரு. **ஹரிகிருஷ்ணன்,** சென்னை
71. திரு. **ஞானசம்பந்தம்,** சென்னை
72. திரு. M.V. **பாலன்,** காரைக்குடி
73. திரு. **சங்கர நாராயணன்,** கும்பகோணம்
74. ஆடிட்டர். திரு.**ஜெயகோபி** & திருமதி. **ஹேமலதா,** சேலம்
75. திரு. **செந்தில்,** டைலர், திண்டுக்கல்
76. திரு. **நவராஜா,** ஜெர்மனி
77. திரு. **Hr. தேவராஜன்,** சேலம்
78. ஜோதிடர். **ஆறுமுகம் தியாகராஜன்,** செகன்ராபாத்
79. திரு. **ரவி,** சென்னை
80. திரு. K.S. **இராமமூர்த்தி** & திருமதி **விஜயகுமாரி,** சென்னை
81. திரு. **வெங்கட்டராமன்,** (டீக்கடை) மறைமலை நகர், சென்னை.
82. திரு. **சிவச்சந்திரன்** & திருமதி. **சாந்தி** குடும்பத்தினர், சென்னை.
83. திரு. **G.பாலசுந்தரம்,** சென்னை
84. திரு. **சுந்தர் விபாகரன்,** சென்னை
85. திரு. **விஜயலிங்கம்,** சென்னை
86. திரு. Dr.**கார்த்திக்,** திருக்கழுக்குன்றம்
87. திரு. **நந்தகுமார்,** T.நகர், சென்னை
88. திரு. **K.R.யுகேஷ்குமார்,** சென்னை
89. திரு. **சரவணன் அங்கப்பன்,** பெங்களூர்
90. திரு. **இராஜசேகர்,** பெங்களூர்
91. திரு. **பாண்டி பரமசிவம்,** சென்னை
92. திரு. **துரைசாமி,** M.O.C சேலம்
93. திரு. A.P. **வேலாயுதம் & சந்திரகலா** குடும்பத்தினர், சேலம்
94. திரு. **சுதாகர்,** திருச்சி
95. திரு. **சவுந்தரராஜன்,** Sri Ram Chitfunds சென்னை
96. திரு. **ஆனந்தகுமார்,** ஆணைக்கட்டி, கோவை
97. திரு. **Eng. நந்தகுமார்,** சேலம்
98. திரு. **R.அனிஸ்குமார்,** கோவை
99. திரு. **சீனிவாச பிரசாத்,** பேங்களூர்
100. திரு. **கோபி கார்த்திகேயன்,** Advocate, திருவண்ணாமலை.

101. திரு. ஜோதிடர். **இரமேஷ் ராஜகோபால்,** சென்னை.
102. திரு. **கணேசன்,** குடும்பத்தினர், சென்னை.
103. திரு. **ஜெயச்சந்திரன்,** பெங்களூரு.
104. திரு. **T.சிவக்குமார்,** நாகப்பட்டணம்.
105. திரு. **சீதாராமன்,** பெரம்பூர், சென்னை.
106. திரு. **தேவராஜ்,** பெரம்பூர், சென்னை.
107. திரு. **ஸ்ரீகாந்த் & உஷா,** மாங்காடு சென்னை.
108. திரு. **சங்கர்,** வெஸ்ட் மாம்பலம்.
109. திரு. **ரவிசங்கர்,** சேலம்.
110. திரு. **முருகேசன்,** இராசிபுரம்.
111. திரு. **மூர்த்தி,** ( குரு ஊறுகாய் ) நெல்லை.
112. திரு. **நவநீதம்,** நாகப்பட்டணம்.
113. திரு. **அருணாச்சல சாந்தி,** நெல்ல.
114. திரு. **ரகுராம்,** சென்னை.
115. திரு. **G.S.மணி,** சென்னை.
116. திரு. **ஸ்ரீனிவாசன்,** சென்னை.
117. திரு. **விபுலானந்தன்,** சென்னை.
118. திருமதி. **அபிராமி,** சென்னை.
119. திரு. **A.T.சக்திவேல்,** சேலம்.
120. திரு. **சங்கரி,** கடலூர்.
121. திரு. **சேனாதிபதி,** ஒட்டன்சத்திரம்.
122. திரு. **ரமேஷ் ராமநாதன்,** பேங்களூர்.
123. திரு. **மனோகர் ராஜா,** சேலம்.
124. திரு. **S.இராஜசேகர்,** நெல்லை.
125. திரு. **ஸ்ரீனிவாசன்,** அரும்பாக்கம், சென்னை.
126. திரு. **சித்தார்தன்,** சென்னை.
127. திருமதி. **பிரேம் சங்கீதா,** பேங்களூர்.
128. திரு. **P.பாஸ்கர்,** M/s. Marktech Industries, Mumbai.
129. திரு. **முகமது அப்துல் காதர்,** நெய்வேலி.
130. திரு. **வசந்த்,** திருச்சி.
131. திரு. **K.சேகர் & பெரியசாமி,** பாலாஜி எக்ஸ்போர்ட், சேலம்.
132. திரு. **வெங்கடேஷ்,** இளம்பிள்ளை.
133. திரு. **குணசேகரன்,** ஆடிட்டர், சேலம்.
134. திரு. **கோபால்,** (A.B. Plaid) பெங்களூரு.
135. திரு. **சண்முகம்,** ( விஜய் கேஸ் ) சேலம்.
136. திரு. **ஸ்ரீனிவாசன் சேதுராமன்,** சென்னை.
137. திரு. **சாமி ஐயா,** செங்கோட்டை.
138. திரு. **கோவிந்தராஜன்,** சென்னை.
139. திரு. **கல்யாண சுந்தரம்,** சென்னை.
140. திரு. **R.O.மாரிசெட்டியார்,** சேலம்.
141. திரு. Dr.**அருளானந்தம்,** தாராபுரம்.
142. திருமதி. **சாந்தி,** நாகப்பட்டிணம்.
143. திரு. **V.J.சிவக்குமார்,** சேலம்.
144. திரு. **கோதண்டபாணி,** குன்னூர்.
145. திருமதி. **ராதா அம்மாள்,** சிங்கப்பூர்.
146. திரு. **D.சுப்ரமணி,** பாண்டிச்சேரி.
147. திரு. **KMLST. பிரபு**
148. திரு. **K.சுவாமிநாதன்,** சென்னை.
149. திரு. **V.சந்திரசேகர்,** ஹைதராபாத்.
150. திரு. **A.குமார் - விஜயலட்சுமி குமார்,** துறைபாக்கம்,சென்னை.
151. திரு. **V.ராஜேந்திரன்,** கோவை.

## நன்கொடைகளை வழங்க....

1. **HDFC BANK- SRI BAGAVATH MISSION A/c No. 15907620000075, NEFT IFSC: HDFC 0001590**
2. **STATE BANK OF INDIA - SRI BAGAVATH MISSION A/c No. 31784345329, NEFT IFSC: SBIN 0012772**

என்ற கணக்கில் செலுத்தலாம். **Bank A/C** ல் நேரடியாக செலுத்தியவர்கள் 97891 65555 என்ற கைப்பேசி எண்ணிற்குத் தகவல் தெரிவிக்க அன்புடன் வேண்டுகிறோம்.

## பகவத் பாதை சந்தா விபரம்

நமது பகவத் பாதை மாத இதழானது ஒவ்வொரு மாதமும் 10-ம் தேதிக்குள் தபாலில் அனுப்பி வைக்கப்படுகிறது. இது அதிகபட்சமாக 15 நாட்களுக்குள் அனைவரது இல்லங்களையும் வந்து சேரும் என்று எதிர்பார்க்கிறோம். எனவே ஒவ்வொரு மாதமும் 25ம் தேதிக்குள் “பகவத் பாதை” தங்களுக்கு வராதவர்கள் போனில் தொடர்பு கொண்டோ அல்லது "Pathai Missing" என்று Type செய்து சந்தா எண்ணுடன் தங்களது முழு முகவரியையும் கீழ்க்கண்ட எண்ணுக்கு SMS அனுப்பியோ தகவல் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இதுவரை சந்தா செலுத்தாதவர்கள், அல்லது புதுப்பிக்காதவர்கள் கீழ்க்கண்ட ஏதேனும் ஒரு வகையில் சந்தா செலுத்துமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

பகவத் பாதை மாத இதழுக்கு சந்தா செலுத்த விரும்புபவர்கள் கீழ்க்காணும் ஏதேனும் ஒரு வழியில் செலுத்தலாம்.

**ஓர் ஆண்டு சந்தா – ரூ.100/–** **ஐந்தாண்டு சந்தா – ரூ. 500/–** **ஆயுள் சந்தா – ரூ, 1000/–**

சந்தாத் தொகையை **"Sri Bagavath Mission"** என்ற பெயரில் **M.O.** அல்லது சேலத்தில் செல்லத் தக்க **D.D. (or) Cheque** மூலம் அனுப்பலாம்.

**www.pravaagam.org** என்ற இணைய தளத்தில் **Credit Card / Debit Card** மூலமாகவும் சந்தா செலுத்தலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் **HDFC Bank- Sri Bagavath Mission**

**A/c No. 15907620000075, NEFT IFSC: HDFC 0001590** என்ற கணக்கில் செலுத்தலாம்.

**Bank A/C** ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை 92620 61838 என்ற எண்ணிற்கு **SMS** மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.



# ஸ்ரீ பகவத் பவன் திறப்பு விழாவில் ஆத்ம ஞானி. தேனி சுவாமி







## அறிவிப்பு



ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையத்தின் புதிய தலைவராக (01-04-2016 - 31-03-2017) வெஸ்ட் மாம்பலம் திரு. **M.**இரவிச்சந்திரன் அவர்கள் பொறுப்பேற்றுள்ளார். பகவத் பாதை மற்றும் ஸ்ரீ பகவத் மிஷன் சம்பந்தமான தொடர்புகளுக்கும், தகவல்களுக்கும் திரு. **M.**இரவிச்சந்திரன் அவர்களை தொடர்புகொள்ளுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

திரு. **M.**இரவிச்சந்திரன் அவர்கள் பின்வரும் முகவரியில் இருந்து செயல்படுவார் எனத் தெரிவித்துக்கொள்கிறோம்.

**ஸ்ரீ பகவத் மிஷன் திரு. M. இரவிச்சந்திரன்**

24/35, கிருபாசங்கரி தெரு, வெஸ்ட் மாம்பலம்,
ரங்கராஜபுரம் 5 லைட்ஸ் & சிறுங்கேரி சாரதா பீடம் கோயில் அருகில்,
சென்னை - 600 033. கைப்பேசி : 94444 02986 போன் : 044-24802986

# பகவத் ஐயாவின் ஹைதராபாத் நிகழ்ச்சி

ஸ்ரீபகவத் ஐயா அவர்களின் சிறப்புரை கூட்டம் சென்ற பிப்ரவரி மாதம் 26, 27, 28 தேதிகளில் ஹைதராபாத்தில் நடைபெற்றது. இதனை ஹைத்ராபாதில் உள்ள திரு. ஜோசப் ஜெயராஜ் அவர்கள் ஏற்பாடு செய்திருந்தார்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் நானும் சரவணனும் செல்லும் வாய்ப்பு கிடைத்தது. சென்னையில் இருந்து விமானம் மூலம் ஹைத்ராபாத்துக்கு 26.02.2016 காலை 6 மணிக்கு புறப்பட்டு 7.15க்கு சென்றடைந்தோம். திரு. ஜோசப் ஜெயராஜ் அவர்களும் அவரது நண்பர் திரு. நரேந்தர் அவர்களும் முன்னதாகவே விமான நிலையம் வந்திருந்து எங்களை வரவேற்று அழைத்துச் சென்றனர். அங்கிருந்து செகன்தராபாத்தில் உள்ள சகோதரி மங்கள கௌரி அவர்களின் இல்லத்தில் தங்கினோம். இவர் ஐயாவின் ஆங்கில நூல்கள் அனைத்தையும் படித்தவர். பலமுறை இவரிடம் போனில் உரையாடியிருந்தாலும் இப்போது தான் இவரை நேரில் சந்திக்கும் வாய்ப்பு கிடைத்தது. இவர் ஐயாவின் மீது அளவு கடந்த மதிப்பும் மரியாதையும் வைத்திருக்கிறார். எங்களை நன்கு உபசரித்து கவனித்துக்கொண்டார். எங்களின் சொந்த சகோதரியாகவே பழகினார். அன்று மாலை ஹைத்ராபாத்தில் உள்ள Lakdi Ka Pool-ல் உள்ள வாசவி கிளபில் ஐயாவின் சத்சங்கம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஐயா அவர்கள் **"Secret of Self Realisation"** என்ற தலைப்பில் ஆங்கிலத்தில் உரையாற்றினார்கள். மேலும் இதே கிளப்பில் உள்ள A/C ஆடிட்டோரியத்தில் 28.2.2016 அன்று காலை மீண்டும் ஒரு சத்சங்கம் **"Easy Way to Enlightenment"** என்ற தலைப்பில் உரையாற்றினார். ஐயாவின் உரை புதுமையாகவும் மிக எளிமையாக அனைவரும் புரிந்து கொள்ளும் வகையிலும் அமைந்திருந்தது. உரைக்குப் பிறகு கேள்வி பதில் நிகழ்ச்சி நடைபெற்றது. இதில் கலந்து கொண்ட ஹைதராபாத் அன்பர்கள் ஆர்வத்துடன் தங்களது சந்தேகங்களைக் கேட்டுத் தெளிவு பெற்றனர். பலர் ஐயாவின் ஆங்கில நூல்களை ஆர்வமுடன் வாங்கினர். மேலும் அடுத்த முறை ஹைத்ராபாத் வரும்போது ஆங்கிலத்தில் ஞானமுகாம் ஒன்றை ஏற்பாடு செய்ய வேண்டி தங்களது விருப்பத்தையும் தெரிவித்தனர். திரு. ஜோசப் ஜெயராஜ் அவர்கள் தனது நண்பர்களோடு இணைந்து ஐயாவின் ஆங்கில சிறப்புரை கூட்டங்கள் இரண்டையும் ஏற்பாடு செய்திருந்தார்.

மேலும் ஹைத்ராபாத் தமிழ்ச் சங்கத்தோடு இணைந்து செகன்தராபாத்தில் உள்ள Keyes High School-ல் **"கவலையின்றி வாழ்வது எப்படி"** என்ற தலைப்பில் 27.2.2016 சனிக்கிழமை மாலையும், ஹைதராபாத் கச்சிபௌளியில் அமைந்துள்ள Bramhma Kumari Santhi Sarowar ஹாலில் 28.2.2016 மாலையும் இதே தலைப்பிலும் ஐயாவின் சத்சங்கத்தை தமிழில் ஏற்பாடு செய்திருந்தார்.

இவ்விரண்டு நிகழ்ச்சிகளிலும் ஹைதராபாத் தமிழ் மக்கள் பலரும் கலந்து கொண்டு பயனடைந்தனர். கலந்து கொண்டவர்களின் ஆர்வத்தைப் பார்த்த ஹைதாரபாத் தமிழ் சங்கத்தின் செயலாளர் Dr.N.கிருபானந்தம் அவர்கள், ஐயாவின் ஞான முகாமை எந்தக் கட்டணமுமின்றி இலவசமாகத் தமிழ்ச் சங்கத்தின் மூலம் ஹைதராபாத்தில் நடத்த போவதாக தெரிவித்தார்.

ஹைத்ராபாத் தமிழ் மக்களுக்கு ஸ்ரீபகவத் ஐயாவின் சிறப்புரை கூட்டத்தை ஏற்பாடு செய்து அவர்களும் ஞானத் தெளிவு பெற பேருதவி புரிந்த ஹைத்ராபாத் தமிழ்ச்சங்கத்தின் செயலாளர் கிருபானந்தம் ஐயா அவர்களுக்கும் மேலும் தமிழ்ச் சங்க நிர்வாகிகள் திரு. ராஜ்குமார், திரு. தர்மசீரன், திரு. விஜய குமார், திரு. அப்துல் ரகுமான், திரு. மணிகண்டன் அவர்களுக்கும் நன்றிகளையும் பாராட்டுகளையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஐயாவின் ஞானப்புரிதலை ஹைத்ராபாத் மக்களுக்கும் கொண்டு செல்ல வேண்டும் என்ற திரு. ஜோசப் ஜெயராஜ் அவர்களின் முயற்சிக்கும் தன்னலமற்ற சேவைக்கும் ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் நன்றிகளையும் பாராட்டுகளையும் தெரிவித்துக்கொள்கிறோம். அவருடன் இருந்து செயலாற்றி உதவிய அவரது நண்பர்கள்

1)Mr. T.Rajkumar, 2) Mr. Narendar, 3) Mrs. Mangalagouri, 4) Mr. Mahendra Varma, 5) Miss. S. Manasha, 6) Miss. Anitha, 7) Mr. Baburaj, 8) Mr. Ravindrababu, 9) Mr. M. Phani kumar, 10)Mr. A. Thiyagarajan, 11) Mr. Vijay, 12) Mr. Vishal, 13) Mr. S.M. Reddy, 14) Mr. Ravishankar Shrivas, 15) Mr. Dupey, 16) Mr. Vincent, 17) Mr. Sagayaraj, 18)Mr. UMV. Prasad ஆகிய அனைவருக்கும் நன்றிகளையும் பாராட்டுகளையும் தெரிவித்துக்கொள்வோம்.

மேலும் எங்களுக்கு அறுசுவை உணவளித்து அன்போடு உபசரித்த ஐயாவின் மீது அளவுகடந்த மதிப்பு கொண்ட எங்கள் சகோதரி **மங்கள கௌரி** அவர்களுக்கும் அவர்களது குடும்பத்தாருக்கும் உளமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.

ஸ்ரீ பகவத் ஐயாவின் ஹைதராபாத் வீடியோ உரைகள் அனைத்தையும் Youtube-ல் பதிவேற்றம் (Upload) செய்யப்பட்டுள்ளது. இதனை நண்பர்களுக்கும் தெரிவித்துத் தாங்களும் பயனடையுமாறு கேட்டுக்கொள்கிறோம்.



கோடையில் இயற்கைச் சூழல் மிகுந்த

# ஏற்காடு மலைப் பிரதேசத்தில் 4 நாள்

# சிறப்பு ஞானமுகாம்

வழங்குபவர் : **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்

இடம் : **House of Peace (Glass House)** அமைதி இல்லம், ஏற்காடு.

நாள் : **26-05-2016** வியாழன் மாலை **3:00** மணி முதல்

**29-05-2016** ஞாயிறு மாலை **3:00** மணி வரை

தலைப்புகள்

1. ஞானப் புரிதல் 2. அகம் - புறம் 3. நான் யார்? 4. நினைவும் சிந்தித்தலும் 5. கர்ம வினை 6. தெளிவில் உறுதி

- இது கோடை காலத்திற்கு ஏற்ற சுற்றுலா தலமாக அமைந்திருப்பதால் குடும்பத்துடன் பங்கு பெறலாம்.
- மேற்குறிப்பிட்ட தலைப்புகளில் ஐயா உரையாற்றுவதோடு அன்பர்களின் எல்லாவிதமான சந்தேகங்களுக்கும் பதில் அளிக்க உள்ளார்.
- ஆண்களுக்கும், பெண்களுக்கும் தங்குவதற்கான தனித்தனி இடவசதி உள்ளது. ஒவ்வொருவருக்கும் தனித்தனி படுக்கை வசதி உள்ளது. தனி அறைகள் 10 மட்டும் உள்ளதால் குடும்பத்துடன் வருபவர்களுக்கு மட்டும் தனி அறை கொடுக்கப்படும்.
- உணவு மற்றும் தங்கும் இடவசதிக்கான செலவு பகிர்வு தலா ஒருவருக்கு ரூ. 3000/- மட்டுமே.
- 90 நபர்கள் மட்டுமே தங்க இடமிருப்பதால் பங்கேற்க விரும்புபவர்கள் விரைவில் முன்பதிவு செய்திட வேண்டுகிறோம்.

முன்பதிவு செய்யும் வழிகள்:

1) **M.O, D.D. (or) Cheque :** வரைவோலை (D.D.) அனுப்புபவர்கள் : **A/c. Sri Bagavath Mission** என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

2) **Direct payment :** நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் : **Sri Bagavath Mission, HDFC A/c No. : 15907620000075 NEFT IFSC: HDFC 001590** என்ற வங்கிக் கணக்கில் செலுத்தி தெரியப்படுத்தவும்.

3) **Online Payment : Credit Card or Debit Card** மூலம் **www.pravaagam.org** என்ற வெப்சைட்டிலும் முன்பதிவு செய்யலாம்.

ஸ்ரீ பகவத் மிஷன் 31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம் - 3. கைப்பேசி : 9994205880, 9789165555.

**மே மாதம் 16 ஆம் தேதி தமிழகம் முழுவதும் நடைபெறும் தேர்தல் காரணமாக ஏற்காடு சிறப்பு ஞானமுகாம் மே 26-ம் தேதி முதல் மே 29-ம் தேதி வரையாக மாற்றப்பட்டுள்ளது.**



2015 மே மாதம் ஏற்காடு ஞானமுகமில் கலந்து கொண்டவர்கள்



# ஜென் கதை

# குரங்குப் பிடி

ஒரு பாம்பு அடிபட்டு இறப்பை நோக்கி வளைந்து நெளிந்து தரையில் ஊர்ந்து கொண்டிருந்தது.

அதைப் பார்த்த ஒரு குட்டிக் குரங்குக்கு வேடிக்கையாக இருந்தது. மெதுவாகப் போய் அந்தப பாம்பைக் கையில் பிடித்து விட்டது.

பாம்பு குரங்கின் கையை இறுக்கமாகச் சுற்றிக் கொண்டது. விஷப் பல்லைக் காட்டிச் சீறியது.

குரங்குக்குக் கொஞ்சம் பயம் வந்து விட்டது. கொஞ்ச நேரத்திலேயே அதன் கூட்டமெல்லாம் கூடிவந்து விட்டன. ஆனாலும் எந்தக் குரங்குமே குட்டிக் குரங்கிற்கு உதவ முன்வரவில்லை.

“ஐய்யோ! இது பயங்கரமான விஷமுள்ள பாம்பு இது கொத்துனா உடனே மரணந்தான். இவன் பிடியை விட்டதுமே பாம்பு இவனப் போட்டுடும். இவன் தப்பிக்கவே முடியாது” என்று குட்டிக் குரங்கின் காது படவே பேசிவிட்டு ஒவ்வொன்றாகக் கலைந்து சென்று விட்டன.

தன்னுடைய கூட்டமே தன்னைக் கைவிட்டு விட்ட சூழ்நிலையின் வேதனை, எந்த நேரமும் கொத்திக் குதறத் தயாராக இருக்கும் நச்சுப் பாம்பு, மரண பயம் எல்லாம் சேர்ந்து குரங்கை வாட்டி வதைத்தன.

“ஐயோ, புத்திப் கெட்டுப்போய் நானே வலிய வந்து இந்த மரண வலைக்குள் மாட்டிக் கிட்டேனே.”

குரங்கு பெரியதாய்க் குரலெழுப்பி ஓலமிட்டது.

நேரம் ஓடிக் கொண்டே இருந்தது. உணவும் நீரும் இல்லாமல் உடல் சோர்ந்து போய்விட்டது. கிட்டத்தட்ட மயங்கி சரியும் நிலைக்கு வந்து விட்டது. கண் இருளத் தொடங்கியது.

அந்த நேரத்தில் ஞானி ஒருவர் அந்த வழியே வந்தார். குரங்கு இருந்த நிலைமையைப் பார்த்ததும் நடந்ததை உணர்ந்து கொண்டார். குரங்கை நெருங்கி வந்தார். சொந்தங்களெல்லாம் கைவிட்டுவிட்ட நிலையில், தன்னை நோக்கி மனிதர் ஒருவர் வருவதைக் கண்ட குட்டிக் குரங்கிற்கு கொஞ்சம் நம்பிக்கை வந்தது.

அவர் நெருங்கி வந்து சொன்னார்,

‘‘எவ்வளவு நேரந்தான் பாம்பைக் கையிலேயே பிடிச்சுகிட்டு கஷ்டப்பட போற? அதைக் கீழே போடு” என்றார்.

குரங்கோ, “ஐயய்யோ, பாம்பை நான் விட்டுட்டா அது என்னைக் கொன்னுடும்” என்றது.

அவர் மீண்டும் சொன்னார், “பாம்பு செத்து ரொம்ப நேரமாச்சு அதைக் கீழே வீசு”

அவர் வார்த்தையைக் கேட்ட குரங்கு பயத்ததுடனே பிடியைத் தளர்த்திப் பாம்பைக் கீழே போட்டது.

அட, நிஜமாகவே பாம்பு ஏற்கனவே குரங்குப் பிடியில் செத்து தான் போயிருந்தது.

அப்பாடா, குரங்குக்கு உயிர் வந்தது. அவரை நன்றியுடன் பார்த்தது.

இனிமே இந்த முட்டாள் தனம் பண்ணாதே என்றபடி ஞானி கடந்து போனார்.

இதுபோல் நம்மில் எத்தனையோ பேர் இப்படித் தான் தெரியாமல் செத்த பாம்பைக் கையில் பிடித்து கொண்டு கீழே போடத் தெரியாமல் கதறிக் கொண்டு இருக்கிறோம்.

முடிந்து போன நிலையில் இருக்கும் மோசமான உணர்வுகளை நாமாக தலையில் சுமந்து கொண்டு விடாமல் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு நம்முடைய மொத்த சக்தியையும் இழந்து கீழே இறக்கி வைக்க தெரியாமல் உடல் சோர்ந்து, கண்கள் இருண்டு, மயங்கி சரியும் நிலைக்கு போய்விடுகிறோம்.

நமக்கு இப்படி ஓர் உணர்வு ஏற்பட்டுள்ளது என்பது நமக்குத் தெரியும் போதே அந்த உணர்வு முடிந்து (அ) இறந்து விடுகிறது. இறந்த உணர்வுக்கு நாமாக சக்தி அளிப்பதால் மட்டுமே அந்த உணர்வு உயிர் வாழ்கிறது.

ஞானம் என்ற புரிதல் ஏற்பட்ட கணத்தில் நாம் நம்முடைய ஒட்டு மொத்த உணர்வு பிடியிலிருந்து விடுபட்டு விடுதலை என்னும் சுதந்திரம் அடைந்து விடுகிறோம்.

**“புரிந்தால் ஏற்படுவது விடுதல்”.**

Registration Number of the News Paper TNTAM/2014/57698 Postal Registration Number : TN/WR/SLM(E)/22/2015-2017

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555